19th September 1961]

*Wild Life Sanctuary (Kadamalai Kundu)*

* 1627 Q—SRIMATHI A. S. PONNAMMAL (on behalf of SRI N. R. THIAGARAJAN) : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

மதுரை ஜில்லா, பெரியகுளம் தாலூகா வைகை நதி உற்பத்தி ஸ்தலமான கடமலைகுண்டு பகுதியில் வனவிலங்கு சரணாலயம் அமைக்கப் படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : No, Sir.

SRIMATHI A. S. PONNAMMAL : ஸார், அந்தப் பகுதியில் நிறைய வன விலங்குகள் இருப்பது கனம் அமைச்சருக்குத் தெரியும் என்று நினைக்கிறேன். அரசாங்கம் இதைப்பற்றி மறு பரிசீலனை செய்து அந்த வன விலங்குகளுக்கு பாதுகாப்பு அளிப்பார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : எல்லா வனங்களிலும் வன விலங்குகள் இருக்கின்றன. ஒவ்வொரு வனத்திலும் வன விலங்கு சரணாலயம் அமைப்பது சாத்தியமல்ல. ஆனால், மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நமது மாநிலத்தில் நான்கு இடங்களில் வன விலங்கு சரணாலயங்கள் அமைப்பதுபற்றி பரிசீலனையில் இருக்கிறது.

*Per Capita income (Agricultural labours)*

* 1628 Q—SRI S. M. ANNAMALAI,
SRI V. K. KOTHANDARAMAN : } கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1950–51-ல் விவசாயத் தொழிலாளர்களின் தனிநபர் வருமானத்தைவிட (per capita income) 1958–59-ல் குறைந்திருப்பது உண்மையா ?

(இ) அப்படியாயின் அதைப் போக்க சர்க்கார் எடுத்துக்கொண்ட முயற்சிகள் யாவை ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (அ) & (இ) A statement [a] is placed on the table of the House.

SRI V. K. KOTHANDARAMAN : 1950–51-ம் வருஷத்திற்கும், 1958–59-ம் வருஷத்திற்கும் எத்தனை சதவீதம் அளவுக்குக் குறைந்திருக்கிறது ? அதற்குக் காரணம் என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இங்கே சமர்ப்பிக்கப் பட்டிருக்கிற காகிதத்தில் கூலி எவ்வளவு கிடைக்கிறது என்று கொடுக்கப் பட்டிருக்கிறது. அதே மாதிரி அரிசி விலையும் கொடுக்கப்பட்டிருக்கிறது. வேலூரில் அரிசி விலை 34·2 சதம் குறைந்திருக்கிறது. அதே மாதிரி திருச்சியில் 10 சதம் குறைந்திருக்கிறது. மதுரையில் 13 சதம் குறைந்திருக்கிறது.

*Medical Colleges—Admissions to*

* 1629 Q.—SRI T. T. DANIEL : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) the total number of seats allotted this year (1961) in the various medical colleges;

(*b*) the number of seats allotted for each district and the basis for the same;

(*c*) the total number of applications received this year from Kanyakumari district; and

---

a Printed as Appendix III on pages 227–229 infra.